தந்தி விலாசம்: "பிளக்பென்ட்" தபால் பெட்டி நெ. 533

# ஜே. ஏ. வெங்கோபா ராவ்

6, பெத்து நாய்க்கன் தெருவு, பார்க்டவுன், மதருஸ்-3.



தண்டவாள கடாய்



Trade Mark
Regd. No. 140236



கல்கத்தா பக்கிட்டு



தண்டவாள ரவுண்டு குமுட்டி

யானை மார்க்கு கல்கத்தா பக்கிட்டு தண்டவாள சாமான்கள் வாங்க மறவாதீர், அவை உறுதிக்கும் உழைப்புக்கும், உயர்ந்த ரகத்திற்கும், மலிவான விலைக்கும் பெயர் பெற்றவை



தண்டவாள சதுர அடுப்பு



தண்டவாள காது தவ்வா



தண்டவாள
சிலோன் தோசைக்கல்

வெளியூர் ஆர்டர்கள் அப்போதுக்கப்போது கவனிக்கப்படும், தங்கள் ஆர்டர் எதிர் பார்க்கிறோம்.



தண்டவாள தோசைக்கல்




தண்டவாள அம்மன்தாஸ்த

பிரிவு 1

## ஜீரணம்

இந்தப் பிரிவு ஜீரண உறுப்புக்களின் அமைப்பு, ஜீரணம் நடக்கும் விதம், உணவு உடம்பில் சேர்தல், ஜீரண உறுப்புக்களைப் பாதிக்கும் வியாதிகள் முதலியவற்றைக் காட்டுகிறது.

1. **உருவங்கள் :** ஜீரணப் பாதை,—அதற்குப் பக்கத்தில் உள்ள ஜீரண நீர் சுரக்கும் பைகள்.—பல்லும், ஈறும், வாயில் உமிழ் நீர் உண்டாகும் பைகள்—மண்ணீரல், கல்லீரல், கணையம் முதலியவை.

2. **வேலை செய்யும் உருவங்களும்; எக்ஸ்ரே படங்களும் :** ஜீரணப் பாதை வழியாக உணவு செல்லும் வழி. எவ்வளவு நேரத்தில், உணவு எந்த எந்த இடத்தில் இருக்கும் என்பனவற்றைக் காட்டுகின்றன.

3. **படங்கள்:** ஜீரணம், உணவு இரத்தத்தில் சேரும் விதம ஆகியவற்றைக் காட்டுகிறது.

4. **வியாதிகளும் சிகிச்சையும் :** ஜீரண வியாதிகளின்போது ஜீரண உறுப்புக்கள் எப்படி இருக்கும் என்பவை.
மருந்துகள் மூலமும், ஆப்பரேஷன்கள் மூலமும் சிகிச்சை.

5. **மூத்திரப் பைகள்; மூத்திரக் குழாய்கள் :** இவைகளின் உருவங்களையும் அமைப்பையும் பாருங்கள்: மூத்திரம் உண்டாகும் விதத்தை நேரில் காணுங்கள். மூத்திர உறுப்புகளின் பரிசோதனை; மூத்திரக் காய்களின் வேலை, வியாதிகளின்போது மூத்திர உறுப்புக்களில் மாறுதல்கள், சில புகைப்படங்கள், இந்த வியாதிகளுக்கு சில சிகிச்சைகள் முதலியனவையும் காட்டப்பட்டுள்ளன.

## பிரிவு 2

## சுவாசித்தலும் க்ஷயரோகமும்

இந்தப்பிரிவில் சுவாசக் குழாய்கள், பைகள் அவைகளின் இருப்பிடம் முதலியவற்றை கீழே கண்ட உருவங்களின் உதவியால் தெரிந்து கொள்வீர்கள்.

1. மூக்கும் அதன் உட்பாகங்களின் உருவங்களும், 2. குரல் உறுப்பு, சுவாசக் குழாய் அதன் கிளைகள் முதலியவற்றின் உருவங்கள், 3. எலும்புக் கூட்டினுள் உள்ள சுவாசப் பைகளின் உருவங்கள்.

அதன் பின்னர் சுவாசித்தல் நடைபெறும் விதம், வாயுக்கள் மாறும் விதம் முதலியவற்றை கீழே கண்ட உருவங்களின் உதவியால் விளக்கப்படுகின்றன.

1. சுவாசிக்கும்போது நெஞ்சு எப்படி விரிந்து சுருங்குகிறது என்பதைக் காட்டும் உருவங்கள், 2. இது எப்படி நடக்கிறது என்பதைக் காட்டும் உபகரணம், 3. சுவாசித்தலின் திறமையை அளக்க உதவும் இயந்திரம்.

மிருகங்கள் சுவாசித்தலுக்கும், தாவரங்கள் சுவாசித்தலுக்கும் உள்ள வித்தியாசத்தைப் பாருங்கள். வியாதிகளிலே சுவாச உறுப்புக்கள் சம்பந்தமான நோய்கள்தான் அதிகம். ஆஸ்பத்திரியில் உள்ள புள்ளி விவரங்கள் இதைக் காட்டுகிறது.

ஆஸ்த்மா அல்லது காசம் என்னும் நோயைப் பற்றிய சில விவரங்கள் விளக்கப்பட்டுள்ளன. மார்பு வியாதிகளில், வியாதிகளைக் கண்டுபிடிக்க, எக்ஸ்ரே மிகவும் உபயோகபபடுகிறது என்பதும் காட்டப்பட்டுள்ளது.

இந்தியாவில் இன்றுள்ள நெஞ்சு வியாகளில் க்ஷயரோகம் தான் மிகவும் சாதாரணமானது. க்ஷயரோக வியாதியின் காரணம், அதைத் தடுக்கும் வழிகள், வியாதிக்கு சிகிச்சை முதலியவற்றை இந்தப் பிரிவில் நீங்கள் தெரிந்து கொள்ளலாம்.

**ஆரோக்கியமான நிலைமையில்** இருமல் இருக்கவே இருக்காது என்பதை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள் இருமல் என்றால் அஜாக்கிரதையாக இருக்காதீர்கள். இரண்டு வாரத்திற்கு மேல் இருக்குமானால், கண்டிப்பாக உங்கள் குடும்ப டாக்டரைப் பாருங்கள்.

### மார்பில் ரணசிகிச்சை

க்ஷயரோக வியாதி ஆரம்ப காலத்திலேயே கண்டு பிடிக்கப்பட்டு சிகிச்சை ஆரம்பிக்கப்பட்டால், ஓய்வும் மருந்துகளும் குணமளிக்கும்.

மிகவும் முற்றின க்ஷயரோகத்திற்குச் செய்யப்படும் ரணசிகிச்சையின் விவரங்களை உருவங்களும், எக்ஸ்ரேப் படங்களும் விளக்கும்.

## *பிரிவு 3*

## கர்ப்பம்: கருவின் வளர்ச்சி.

**கர்ப்பிணிகளுக்கு சில யோசனைகள்.**

*இந்தப் பிரிவில் பெண்களின் ஜனனேந்திரிய உறுப்புக்களின் அமைப்பைக் காண்பீர்கள். படங்கள் மூலமாகவும், உருவங்களின் மூலமாகவும் கருவின் ஆக்கம, தாயின் கர்ப்பப் பையில் குழந்தை வளரும விதம, பரிசோதனைகளின் மூலம் எப்படி காபபம் கண்டுபிடிக்கபபடும் என்பவை விளக்கப்படும். கர்ப்பமுண்டான மாதர்கள் அநதக் காலத்தில் பிரத்தியேகமாக என்னென்ன கவனிக்க வேண்டும் என்பவை விவரமாக விளக்கிக் காட்டபபட்டுள்ளது. கர்ப்ப காலத்திலும், பிரசவத்திறகுப் பின்னரும், மாதர்களுக்கு வேண்டிய ஆகாரத்தைப் பற்றிச் சில விவரத்தைத் தெரிந்து கொள்ளலாம்.*

*இஙகே சில உருவங்கள் சுகப் பிரசவத்தைக் காட்டுகின்றன; மேலும் கர்ப்ப காலத்தில் நேரிடக் கூடிய கஷ்டங்களையும், கர்ப்பச் சிதைவு, ஆப்பரேஷன்களின் மூலம் பிரசவம் நடத்தல் முதலியவற்றைக் காட்டும் உருவங்களையும் காணலாம். பலவிதமான அதிசயப் பிறவிகளையும், இரட்டை, மூன்று முதலிய கர்ப்பங்களையும் கண்டு ஆச்சரியப்படுவீர்கள்.*

**சிசுக் குழந்தையின் பராமரிப்பையும் இங்கே காணலாம்.**

*பிரிவு 4*

## குழந்தையின் ஆரோக்கியம்.

1 **வளர்ச்சி :** நம் நாட்டு குழந்தைகளும், மற்ற நாட்டுக் குழந்தைகளுக்கும் சாதாரணமாக இருக்கவேண்டிய எடை, வயதுக்கும் உயரத்திற்கும் உள்ள தொடர்பு முதலியவை படங்கள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

குழந்தையின் பிறப்பு முதல் இரண்டு வயதுவரை அதன் வளர்ச்சியின் படிகள் ஒவ்வொன்றாக பிரகாசமான கண்ணாடிப் பெட்டிகளாலும், படங்களாலும் விளக்கப்படுகின்றன.

2. **சிசுக் குழந்தையின் போஷணை,:** குழந்தைகளுக்குத் தாய்ப்பாலே சிறந்த உணவு. ஏன்? சரியாகத் தாய்ப்பால் கொடுக்கும் விதம் எப்படி, பசுவின் பாலுக்கும், தாய்ப்பாலுக்கும் உள்ள நன்மை தீமைகள் முதலியவற்றைக் காட்டும படங்கள் உள்ளன. ஆரோக்கியமான குழந்தைகளை அடைய தாய்மார்கள் என்னென்ன செய்யக் கூடாது என்பது படங்களில் எழுதப்பட்டுள்ளது.

எந்தெந்த குழந்தை எத்தனை மணி நேரம் தூங்கவேண்டும்? திடகாத்திரமும், ஆரோக்கியமும், நிறைந்த குழந்தைகளை அடைய, கர்ப்ப காலத்திலும், பிரசவகாலத்திலும், தாய்மார்கள் என்னென்ன செய்யவேண்டும், என்பதைத் தெரிந்து கொள்ளலாம்,

பூரண வளர்ச்சியடையாத குழந்தை என்பது என்ன? இம்மாதிரிக் குழந்தைகள் பிறப்பதைத் தடுக்கச் சில திட்டங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன. 100-க்கு 20 குழந்தைகள் பூரண வளர்ச்சியடையாமல் பிறக்கின்றன. இம்மாதிரியான பூரண வளர்ச்சிக் குறைவாக பிறக்கும் 100 குழநதைகளில் 50 சத விகிதம் மடிந்துவிடுகின்றன.

3. **வியாதிகள் :** தொண்டைக்கரப்பான், இளம் பிள்ளை வாதம் முதலிய பல வியாதிகள் உருவங்களால் விளக்கப்பட்டுள்ளன.

4. **புள்ளி விவரம் :** சிசுக்கள் மரணக் கணக்கு, சென்னை மாகாணத்தில் பிறப்பு விகிதம் முதலியவை இந்தியாவின் மற்ற மாகாணங்களுடன் ஒத்துக் காட்டப்பட்டுள்ளன.

5. **பிரசவமும், குழந்தையின் ஆரோக்கியத் திட்டமும் :** படங்கள் மூலம் விளக்கிக் காட்டப்பட்டுள்ளன.

6. **உணவு :** உணவின் தராதர மதிப்பும், உணவுக் குறைவால் ஏற்படும் வியாதிகளும் காட்டப்பட்டுள்ளன.

7. **அசோக் விஹார் :** அசோக் விஹாரின் சித்திரங்கள்.

பிரிவு 5

## எக்ஸ்ரேக் கதிர்கள்

எக்ஸ்ரேக் கதிர்கள், வியாதிகள் முதலியவற்றைக் கண்டுபிடிப்பதற்காகவும், சில வியாதிகளைக் குணப்படுத்துவதற்காகவும் உபயோகிக்கப் படுகிறது. பல வியாதிகளில் எக்ஸ்ரேக் கதிர்கள், காமாக் கதிர்கள் முதலியவற்றின் உபயோகங்களை இந்தப் பிரிவு காட்டுகிறது.

எக்ஸ்ரேக் கதிர்கள முக்கியமாக மிகவும் பயங்கரமான "புற்று நோய்" வியாதியைக் குணப்படுத்த உபயோகப்படுகிறது. புற்று நோய் ஆரமபத்திலேயே கண்டுபிடிக்கப்பட்டு, ஆரம்பத்திலேயே சிகிச்சை செய்யப்பட்டால், பூரணமாக குணப்படுத்த முடியும். புற்று நோயைக் கண்டு பிடிக்கவும், சிகிச்சை செய்யவுமில்லாமல் காலத்தைக் கடத்தினால், வியாதியஸ்தரைக் காப்பாற்றுவதே கஷ்டம்.

இந்த எக்ஸ்ரே சிகிச்சைப் பிரிவு வைத்திருப்பதின் நோக்கமே மக்களுக்குப் "புற்று நோய்" பற்றிய எச்சரிக்கை மனத்தில் பதியவைக்கவேண்டும் என்பதற்காகத்தான். இதனால் மக்கள் உடனுக்குடன் பரிசோதனை செய்துகொள்ளலாம்; அல்லது ஆரம்ப காலத்திலேயே மக்கள் தங்கள் டாக்டரைக் கலந்துகொள்ளலாம்.

எக்ஸ்ரேக் கதிர்கள் வியாதிகளைக் கண்டுபிடிக்க மிகவும் உபயோகிக்கப்படுகிறது. எந்த வியாதியும், அது இன்னதுதான் என்று நிர்ணயிக்கப் படாமல் சிகிச்சை செய்தால் விஞ்ஞான ரீதியில் தவறாகும். வியாதிகளைக் கண்டுபிடிக்க உதவும் கருவிகளில எக்ஸ்ரேக் கதிர்கள் இன்றைய மருத்துவ உலகில் இன்றியமையாதவை.

புற்று நோயிலிருந்து உங்களை எப்படிக் காப்பாற்றிக்கொள்ளலாம்?

1. இதோ சில பயங்கர அறிகுறிகள்.

   அ. சீக்கிரம் குணமாகாத புண்கள்.

   ஆ. உடம்பில் கட்டி உண்டாதல், முக்கியமாக ஸ்தனங்களில்.

   இ. உடமபில் வாய், மூக்கு முதலிய பல துவாரங்களில் விட்டு விட்டு இரத்தம் அல்லது சீழ் கொட்டுதல்.

   ஈ. நடுத்தர வயதில் தொடர்ந்தாற்போல் அஜீரணம்.

   உ. நடுத்தர வயதில் காரணமில்லாமல் மலச்சிக்கலும், பேதியும்.

   ஊ. மச்சத்தின் நிறம் மாறுதல் அல்லது அளவு அதிகரித்தல்.

   எ. காரணமில்லாமல் உடம்பு கனம் குறைதல்.

2. புற்று நோயின் ஆரம்ப அறிகுறியின்போதே உங்கள் டாக்டரைப் பாருங்கள்.

3. அடிக்கடி உங்கள் டாக்டரிடம் உடல் பரிசோதனை செய்து கொள்ளுங்கள்.

## பிரிவு 6

# மேக வியாதிகள்

மனிதர்களுக்கு வரக்கூடிய வியாதிகளில் பெரும்பான்மையானவை இந்த மேக வியாதிகள் கூட்டத்தைச் சேர்ந்தவை. பெருவாரியான மரணங்களுக்குக்கூட இவை காரணமாகின்றன. இந்த வியாதிகளை உண்டாக்கும் கிருமிகளை, பூதக் கண்ணாடியின் உதவியில்லாமல், நீங்கள் உங்கள் கண்களால் நேரே பார்க்க முடியாது.

கிரந்தி, மேகம், அரையாப்பு முதலிய சில வியாதிகளைப் பற்றிய குறிப்புகள் பல பாஷைகளில் எழுதித் தரப்பட்டிருப்பதை இங்கே காணலாம்.

கிரந்தியால் பாதிக்கப்படாத ஆரோக்கியமான குடும்பத்திற்கும், கிரந்தையால் பீடிக்கப்பட்ட குடும்பத்திற்குமுள்ள வித்தியாசங்களை பொம்மை உருவங்கள் காட்டுகின்றன. பெருவாரியான குழந்தைகள் பிறந்த முதல் வருஷத்திலேயே இறப்பதற்குக் காரணம், அவை கிரந்தி நோயால் பீடிக்கப்பட்டதால்தான். குடும்பத்திலே கிரந்தி நோய் வந்தால் ஆண்களில் தலைகளில் ஏற்படும் மாறுதல்கள், பெண்களின் முகத்திலே ஏற்படும் மாறுதல்கள், குழந்தைகளுக்கு உடம்பு முழுவதும் ஏற்படும் வடுக்கள், பாலர்களுக்கு ஏற்படும் குருடு, மூட்டு நோய்கள் முதலியவை ஏற்படும்.

சமூகத்திலே, மேக வியாதிகளால் ஏற்படும், கொடுமைகளை சில உருவங்களும் விளக்கிக் காட்டுகின்றன.

ஆரோக்கியமான இருதயத்திற்கும். கிரந்தியில் பாதிக்கப்பட்ட இருதயத்திற்கும் உள்ள வித்தியாசம் படங்கள் மூலம் காட்டப்பட்டுள்ளது.

தாயின் கிரந்தி நோயால் பிறக்குமுன் இறந்த குழந்தை ஒன்று பெண்பாலவர்க்கு எடுத்துக் காட்டுவதற்காக வைக்கப்பட்டுள்ளது.

கிரந்தி நோயின் பயங்கரத் தீமைகளைப்பற்றி தமிழில் எழுதப்பட்ட சில பிரசுரங்களை நீங்கள் இனமாக இங்கே பெற்றுக் கொள்ளுங்கள்.

மேகவியாதிகளைப் பற்றி—முக்கியமாக கிரந்தியைப் பற்றிப் பாடப்பட்டுள்ள சில இனிமையான இசைதட்டுப் பாடல்களை இங்கே கேட்டு மகிழுங்கள்.

"படை நகருகிறது" என்று தலைப்புள்ள சித்திரத்தை முக்கியமாகக் கவனியுங்கள். சரும வியாதிகள், குஷ்ட வியாதி, கண்நோய்கள், எலும்பு, மூட்டு வியாதிகள். பல் வியாதிகள், வைத்தியம், ரணசிகிச்சை, பிரசவ வைத்தியம், இவற்றில் சிறந்த டாக்டர்கள், நரஸ்கள், பத்திரிக்கைக் காரர்கள் இந்தப் படையைச் சேர்ந்தவர்கள். இந்தப் படையினரின் துப்பாக்கி" ஊசி போடும் ஸிரின்ஜ் பெனிஸிலின் என்னும மருந்துதான் துப்பாக்கி மருந்தாகும்.

மேகவியாதிகளைப் பற்றிய விஷயங்கள் விரும்புவோர் பிரத்தியேகமாகக் கேட்டறிந்து கொள்ளலாம்.

பிரிவு 7

## மருந்துகளும் அவைகளின் குணங்களும்.

மனிதனுக்கும், வியாதிகளுக்கும் உள்ள இடைவிடாத போர் பரிசோதனைச் சாலையிலும், ஆஸ்பத்திரிகளிலும் தொடர்கிறது. விஞ்ஞான முறையில் இதற்கு வழி வகுப்பதுதான் இந்த பிரிவின் நோக்கம்.

மருந்து முறைகளை கண்டறியும் விஞ்ஞானிதான் முதன் முதலில் மருந்துகளின் தத்துவங்களை கண்டறிந்து அவைகளின் நன்மை தீமைகளையும் அறிந்து பிறகு மற்றவர்களுக்கு உதவியளிக்கும் சஞ்சீவியாக வெளியிடுகின்றான். இதுதான் இந்தப் பிரிவில் வேலை செய்யும் விஞ்ஞானியின் நோக்கம. இன்று நமக்கு கிடைத்துள்ள பல புதிய மருந்து முறைகளும், அவைகளின் குணச் சிறப்புகளும் இந்தப் பிரிவில் காண்பிக்கப் படுகின்றன..

---

## பிரிவு 8

## மருந்து தயாரித்தல்.

இந்தப் பிரிவில் சில மருந்துகள், களிம்புகள், மாத்திரைகள், ஊசி மருந்துகள் முதலியவற்றை தயாரிப்பதற்கு வேண்டிய புதிய யந்திர சாதனங்கள் கண்காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கின்றன.

A. **சூரணம், களிம்புகள் :—**நீங்கள் உள்ளே நுழைந்தவுடன் வலது பக்கத்திலே களிம்புகள் தயார் செய்ய உதவும் சில சாதனங்கள் இருக்கின்றன. மருந்துகளை சூரணம் செய்வதற்கு உதவும் சில யந்திரங்கள் அடுத்தாற்போல் உள்ளன. தூள்களை தரம்வாரியாக பிரிக்கவும், அவைகளை கலக்கவும் உதவும் சில அரிய சாதனங்களும் இங்கே காட்டப்படுகின்றன.

B. **மாத்திரைகள்:—**மாத்திரைகள் தயார் செய்யும் விதத்தை படிப் படியாக இங்கே காணலாம். ஆடிக்கொண்டே தூள்களை உருண்டையாகச் செய்யும் சாதனம், உலர வைக்கும் சாதனம், மாத்திரையாக தயார் செய்யும் கருவி, மாத்திரைகளுக்கு மேலே பூச்சு கொடுக்க உபயோகிக்கும் சாதனம் முதலியவைகள் வேலை செய்யும் விதத்தை இங்கே காணலாம்.

C. **பகுத்தறியும் பிரிவு:—**விண்-ஊதா (அல்ட்ராவயலட்) விளக்கு என்ற ஒரு சாதனத்தைக் கொண்டு மருந்துகளில் கலக்கப்பட்டிருக்கும் போலி மருந்துகளையும், விடமின்கள், மற்றும் சில மருந்துகளின் தராதரங்களையும் இங்கேயும் அறிகின்றனர்.

D. **மருந்து இறக்குதலும், வடித்தலும்:—**மூலிகைகளிலிருந்து மருந்துகளை இறக்கும், முறைகளை இங்கே காணலாம். தானுகவே குலுக்கும் சாதனம், மருந்துகளை வடித்து எடுக்கும் முறைகளில் உபயோகிக்கும் பல அரிய சாதனங்களையும் நீங்கள் இங்கே காணலாம். பெரிய அளவில் வடித்து எடுத்தலுக்கு உபயோகிக்கும் ஒரு பெரிய கருவியையும் நீங்கள் காணலாம்.

E. **எண்ணெய் தண்ணீர் கலந்த மருந்துகள்:—**(Emulsion) மீன் எண்ணெய் மலமிளக்கி எண்ணெய் போன்ற அருவருப்பு தரத்தக்க வாசனை உடைய மருந்துகளை பல மருந்துகளுடன், அவற்றின் வீரியம் கெடாது கலக்கும் முறையினையும், அதற்கு உபயோகப்படும் பல சாதனங்களும் இங்கே வைக்கப்பட்டிருக்கின்றன.

F. **ஊசி மருந்துகள்:—**மருந்துகள் கலக்க உபயோகப் படும், பைரஜன் இல்லாத தண்ணீர் தயாரிக்கும் முறை, ஊசி மருந்துகளை அடைக்கும் குமிழ்களை சுத்தம் செயயும் முறை, தானுகவே மருந்துகளை அவைகளில் அடைப்பது, சீல் வைப்பது, சுத்தம் செய்வது போன்ற பல அரிய சாதனங்ளை இங்கே நீங்கள் காணலாம்.

G. **பெனிஸிலின் தயாரித்தல்:—**பெனிஸிலின் எவ்வாறு தயாரிக்கப் படுகிறது என்பதைப் பற்றி உங்களுக்கு இங்கே தெளிவு படுத்தப்படும். அரசாங்கத்தார் மருந்துகளின் தூய்மையை காப்பாற்ற எடுத்துக் கொள்ளும் பல முயற்சிகளையும், நீங்கள் இங்கே காணலாம்.

கடைசியாக இங்கேயே தயாரிக்கப்பட்ட சில அரிய மருந்துகளை நீங்கள் வாங்கி உங்களால் இயன்ற அளவு நாங்கள் நடத்தும் கிராம வைத்திய சேவை சங்கத்திற்கு உதவி யளிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். இதில் கிடைக்கும் தொகை பூராவும் கிராம வைத்திய சேவை சங்க நிதிக்கு செல்கிறது:

பிரிவு 9

## இரத்த சேமிப்பு நிலையம்

இரணசிகிச்சை, வைத்திய சாஸ்திரம் முதலியவற்றில் சமீப காலத்தில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களில் இந்த இரத்த சேமிப்பு நிலையமும் ஒன்றாகும். இந்தப் பிரிவில்

1. பழங்காலத்தில் இரத்தம் எப்படி உபயோகிக்கப்பட்டது?

2. இரத்தக் குழாய்களுக்குள்ளும், எலும்புக்குள்ளும் எப்படி இரத்தம் செலுத்தப்படுகிறது?

3. எந்தெந்த சமயங்களில் இம்மாதிரி இரத்தம் உடம்புக்குள் செலுத்தப்படும்.

4. ஆர். எச். (Rh) என்னும் இரத்த பரிசோதனை செய்து கொள்வதால் மணமாக இருக்கும் ஆண்களும், பெண்களும் தெரிந்து கொண்டால் வருங்காலத்தில் பிறக்கப் போகும் குழந்தைகளுக்கு ஏற்படும் தீமைகளை அறிந்து கொள்ளலாம்.

இரத்தம் உடம்பில் ஏற்றப்படும் சிகிச்சையால், பெருவாரியான மக்கள் மரணதேவனின் பிடியிலிருந்து தப்புகிறார்கள். இரத்தம் எங்கேயிருந்து கிடைக்கிறது? உங்களைப்போன்ற தாராள உள்ளம் படைத்த மக்கள் சிலர் தினசரி இரத்த சேமிப்பு நிலையத்திற்கு வருகிறார்கள். அவர்கள் சாகக் கிடக்கும் நோயாளிகள் சிலர் உயிர் பெற்று வாழ உதவ வேண்டி, சிறிது இரத்தம் தானம் செய்துவிட்டுப் போகிறார்கள். உங்கள் இரத்தம் எந்த வகையைச் சேர்ந்தது என்று தெரிந்து கொள்ளுங்கள். உடல் பரிசோதனை செய்யும் 21 வது பிரிவில் எட்டணா செலவில் இதை உடனே தெரிந்து கொள்ளலாம். அந்தக் கார்டை உங்களுடன் எப்போதும் வைத்திருங்கள். ஏன்? திடீரென்று உங்களுக்கே இரத்தம் கொடுக்கவேண்டிய நிலைமை என்றோ ஒரு நாள் ஏற்பட்டாலும் ஏற்படலாம்.

நீங்கள் இரத்தம் இதற்குமுன் கொடுத்திருந்தால் மிகவும் வந்தனம். இல்லாதிருந்தால் இன்றே செய்யுங்கள். ஒரு கிணற்றுத் தண்ணீரில் ஒரு வாளித் தண்ணீர் எடுப்பதால் கிணற்றுத் தண்ணீர் குறைந்துவிடுமா என்ன? இங்கே பாருங்கள். அதோ இருக்கும் அன்பர் 54 தடவைகள் இரத்தம் தானம் செய்து விட்டு ஆரோக்கியமான நிலைமையில் இருக்கிறார்.

இரத்த தானம் செய்வதில் வலியில்லை. பயமில்லை." அன்புடன் இந்தப் பிரிவில் அதை ஏற்றுக் கொள்ளுகிறோம்.

பிரிவு 10

## ஆஸ்பத்திரி நடைபெறும் விதம

கவர்ன்மெண்ட் ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு வரும் நோயாளிகளுக்கு ஆஸ்பத்திரி வேலை எப்படி நடைபெறுகிறது. எங்கெந்த இடங்களுக்கு எப்படி எப்படிப் போகவேண்டும் என்பது தெரியாததால் மிகவும் கஷ்டப்படுகிறார்கள் என்று இந்தப் பகுதியைப் புதிதாகச் சேர்த்திருக் கிறோம்.

கீழேகண்டவற்றை இங்கே நீங்கள் பார்க்கலாம் :—

1. வெளியில் இருந்து வந்து சிகிச்சை பெற்றுக் கொள்ளும் இடத் தின் அமைப்பு.

2. ஆஸ்பத்திரியில் உள்ளே தங்கி சிகிச்சை பெற்றுக்கொள்ளும் வார்டுகளின் அமைப்பு.

3. ஆஸ்பத்திரியில் என்னென்ன சிகிச்சைகள் கொடுக்கப்படுகின்றன.

4. ஆஸ்பத்திரியில் கிடைக்கும் சில சிகிச்சைகள் எந்த எந்த நேரத் தில் கிடைக்கும் என்பதைக் காட்டும் கால அட்டவணை.

இன்னும் சந்தேகங்கள் இருந்தால் கேட்டுத் தெரிந்து கொள் ளுங்கள்.

### கிராம வைத்திய சேவைச் சங்கம்

கிராமங்களே இந்தியாவின் ஜீவநாடி. இன்று நகர வாசிகளுக்கு கிடைக்கும் வைத்திய வசதிகள் யாவும் எங்கோ ஒரு மூலையில் நெற்றி வியர்வை கொட்டப் பாடுபடும் ஏழை மக்களுக்கும் கிடைக்கும்படிச் செய்யவேண்டும். இந்தப் பணியே நம நாட்டை செல்வமுள்ளதாகவும், ஆரோக்கியமுள்ளதாகவும், இன்பமுள்ளதாகவும் ஆக்கும்.

இந்தச் சேவையைச் செய்து வரும் ஸ்தாபனம ஒன்றை இங்கே நீங்கள் காணலாம். அது தான் சென்னை மருத்துவக் கல்லூரியின் கிராம சேவைச் சங்கம. இதன் நோக்கம், செய்யும் பணியின் விவரம் முதலிய வற்றை 17-ம் பக்கத்தில் காணலாம்.

சென்னையிலிருந்து 24 மைல் தூரத்தில் உள்ள பாக்கம் என்னும் கிராமத்தில் நாங்கள் செய்து வரும் பணி நீங்கள் இங்கே பார்க்கின்ற கட்டிடத்தில் நடைபெறுகிறது. இந்த ஊரில நாங்கள் ஒரு ஆஸ்பத்திரி யும், வார்டும நிறுவ முயற்சி செய்து முதன் முதலாக இம்மாதிரி ஒரு காரியம் செய்து வெற்றியுமடைந்தோம்.

இந்தக் கண்காட்சியில் சேர்க்கப்படும் நிதி யாவும் எங்கள் கிராம சேவைச் சங்கத்திற்குச் சேருகிறது. இதனால் தான இந்தப் பிரிவு கண் காட்சியின் மத்தியில் உள்ளது.

## பிரிவு 11

## மனித வளர்ச்சி

மனிதன் ஆதிகாலத்திலிருந்து தன்னுடைய உடல் நிலைகளைப் பற்றி வியப்பெய்தி, மனிதனுடைய உடற் கூறின் மர்மங்களை அறிய முயன்ருன். உடற கூறின் விஞ்ஞானத்தை பெரிய அறிஞர்கள் அறிந்து நமக்கு விளக்க மான முறையில் எடுத்துக் கூறுவதில் அவர்கள் தங்கள் உயிர்களை தியாகம் செய்தனர்.

**உடல் வளர்ச்சியின் சாஸ்திரம்:**—மனிதன், ஈ, எறும்பு முதலான சிறிய உயிர்களிலிருநது, உயிர்களிலேயே முதன்மையான நிலையை மெள்ள மெள்ள சிறிது மாறறத்துடன அடைந்தான். அந்த முன்னேற்றம் பல படிகளைக் கொண்டது. முதன் முதலில் ஒரு செல் உள்ள பிராணியான 'அமிபா' என்னும் ஒரு வகை பூச்சி தண்ணீரில் உண்டாயிற்று. பல கோடிக் கணக்கான ஆண்டுகளுக்குப் பின், படிப்படியான மாறுதலுடன் மனிதன் தன் முழு நிலையுடன் இவ்வுலகில் தோன்றினன். இப்படியாக ஒரு சிறிய உயிர் பெரிய சிக்கலான உயிர்களாக முனனேறிற்று.

பல கோடிக்கணக்கான ஆண்டுகளுக்குப் பிறகு, பழங்காலத்து அடையாளச்சின்னங்கள் பல இருக்கின்றன. அவ்வடையாளச் சின்னங்களிலிருந்து மீனுக்கும் தவளைக்கும், தவளைக்கும பாம்பிற்கும், பாம்பிற்கும பறவைக்கும், பறவைக்கும் மிருகங்களுககும். மிருகஙகளுக்கும மனிதனுக்கும் இடையில பல வேறு உயிர்கள வசித்து வந்தன என அறியலாம். மேற் கூறிய கூற்றினல் மனிதனுடைய வளர்ச்சி விஞ்ஞானம் இன்னும் வலுப் பெறுகின்றது.

பல ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மிருகங்களில் சில மாதிரிகள் தான் உங்களுக்கு காட்சி பொருளாக வைக்கப்பட்டிருக்கிறது. அநேக மாதிரிகளிலிருந்து நாம் பழஙகாலத்து முதலே இனங்கள் தான் முதன் முதலில் நீரில் வாழ்வதை விட்டு நிலத்தில வாழ்ந்து வந்தன என்று அறிகிறோம். அவைகள் சேரும், சகதியும் உள்ள இடங்களில் தான் வசித்து வந்தன. ஸ்கூடோசாரஸ்—ஒன்பது அடி நீளம. 220000,000 ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்த ஒன்றின் மாதிரி வைத்துள்ளது. வேறு மாதிரிகள் பல உள. டினேசாாஸ்—40 பவுண்டு எடையுள்ளது. 20 அடி நீளம்.

## பகுதி 12

## உடற் பயிற்சி

கீழ்கண்ட மாதிரிகளும், படக் குறிப்புகளும் இப்பகுதியில் காட்சிக்கு வைக்கப்பட்டுளளன.

1. சாதாரணமாக இருக்க வேண்டிய உயரமும் எடையும்.
2. ஆண்கள் பெண்களின் சுவாசகோசத்தின் திறமை.
3. வயதைப் பற்றிய குறிப்புகள்.
4. உடற் கட்டின் முக்கியம்—ஏதேனும் கோளாறுகள் இருப்பின் படக் குறிப்புகள் மூலம் சீர்திருத்திக் கொள்ளலாம்.
5. உடல் வளர்ச்சியைப் பற்றிய விகிதங்கள்.
6. அதனை சரிப்படுத்துவதற்குரிய பயிற்சிகள்.
7. ஓட்டப்பந்தயங்களும் மைதான விளையாட்டுகள் படங்கள் மூலம் பல்வேறு நாட்டு விளையாட்டுக்காரர்கள் அனுசரிக்கும் முறையை கற்றுக் கொளளலாம்.
8. ஆசனங்கள்.

படங்களை நன்ருகப் பார்த்து அப்படி செய்வதன் மூலம் நல்ல உடற் கட்டு பெறலாம்.

9. இங்கிலாந்தில் உளள சிறந்த விளையாட்டுக்காரர்கள்.
10. அமெரிக்காவில் உடற் பயிற்சி கல்வி.
11. தென்னிந்தியாவில் உடற் பயிற்சியைப் பற்றிய மாதிரிகளும், படக் குறிப்புகளும்.

## பிரிவு 13

# கண், காது, பல்கள் அவைகளின் தற்காப்பும்

### கணகள் :

மனிதனது ஐம்புலன்களிலே கண் மிகவும் பிரதானமானது. கண் இல்லையேல் இயற்கையின் அழகை ரசிக்க முடியாது. கண்ணை ஒரு புகைப்பட பெட்டிக்கு ஒப்பிடலாம். கண்ணினுடைய பல பாகங்களையும், அவைகள் வேலை செய்யும் விதங்களையும் நீங்கள் நன்ருக கவனிக்கவும். கூர்ந்து கவனித்தால் நமது கண் மிக விலை உயர்ந்த புகைப்படப் பெட்டியை விட சால சிறந்தது என்பது தெரிய வரும். மனிதனது வாழ்நாள் முழுவதிலும், கண்ணில் உள்ள புகைப்படத் திரையை போன்ற "ரெடினு" என்ற ஒரு திரையானது உருவங்களை கிரகித்து மூளைக்கு அறிவிக்கிறது, வெளிச்சத்தை வேண்டிய அளவு செலுத்தவும், தூரப் பார்வை கிட்டப்பார்வை போன்றவைகளுக்கும் தானே இயங்கக் கூடிய சாதனங் கள் கண்ணில் உள்ளது. இவ்வளவு அருமையான உங்கள் கண்களில் கூட குருட்டுப் புள்ளி என்ற ஒரு இடம் இருக்கிறது- ஆனுல் அது நமக்கு தெரிவதில்லை- உங்கள் பார்வை மிகவும் கூர்மையாக தெரியாமல் இருக்கலாம். இந்த வர்ணக் குருடு பரம் பரையாக வரும் ஒரு குறைவு. இங்கே நீங்கள் உங்களுடைய வர்ணப் பார்வையை சோதிக்கலாம்.

நம் நாட்டில் பலர் வியாதிகளினுல் பார்வையை இழக்கின்றனர். இந்த வியாதி களை நாம் எளிதில் தடுக்கலாம்-

சதாரண வியாதிகளையும், அவைகளை தடுக்கும் விதங்களையும் இங்கே காண லாம். கண்களில் உண்டாகும் காயங்கள் கண்களை பார்வை இழக்கச் செய்கின்றன. கண்களில் காயங்கள் ஏற்பட்டால் என்ன செய்ய வேண்டும் என்பதையும், அத்த கைய காயங்கள் ஏற்படாத தற்காப்பு விழிகளையும் நீங்கள் இங்கே காணலாம்.

வயதானவர்களுக்கு கண்ணில் உள்ள கண்ணுடி போன்ற ஒரு அவயவம் சுருங்கி ஒளியை மறைத்து விடுகிறது. இதைதான் கண்ணில் பூவிழுவது என்று சொல்கிருர்கள். இதை எளிதில் குணப்படுத்துவதாகச் சொல்லி கிராமங்களில் சிலர் கண்களை குருடாக்கி விடுகின்றனர். படத்தில் ஒரு கிழவன் கண்களுக்கு சிகிச்சை யளிப்பதை காணவும் பிறை உரித்தல் என்று சொல்லி இந்த நாட்டு வைத்தியர் கள் இவர்கள் கண்களை குருடாக்கி விடுகின்றனர்.

கண்ணில் உள்ள பூ எடுக்கும் ஆபரேஷன் முறையை நீங்கள் நேரில் காணலாம். கண்ணின் சில பாகங்களை இறந்தவுடன் எடுத்து அது இல்லாதவர்களுக்கு ஒட்டச் செய்வது போன்ற சில ஆபரேஷன்களை நீங்கள் காணலாம், கண் பார்வை ஒரு மாயை, அது எப்படி என்பதை உங்கள் கண்களின் பார்வையை ஒப்பிட்டு பாருங்கள்,

### காது :

காதின் பல பாகங்கள் நீங்கள் இங்கே காணலாம். சப்தத்தை அதிகம் செய்யும் ஐவ்விற்கு வெளிக் காது உதவுகிறது. ஐவ்வுக்கு அடுத்தால் போல் உள்ள நடுக் காது, அவற்றில் உள்ள எலும்புத் துண்டுகள். உள் காது அவற்றில் உள்ள நரம்புகள் எவ்வாறு மூளைக்கு சப்தத்தை தெரிவிக்கிறது என்பதை நீங்கள் இங்கே காணலாம். நடுக் காதில் உண்டாகும் வியாதிகள் அவைகளின் தற்காப்பு விதிகள், வியாதியால் செவிடாக மாறும் விதங்களை நீ கள் காணலாம்.

செவிடு என்பது எப்படி உண்டாகுகிறது என்பதை நீங்கள் இங்கே காணலாம். அதற்கு செய்யும் சில ஆபரேஷன்களையும் அவைகளின் குணங்களையும் இங்கே காணலாம்.

பலவித ஒலிக் கதிர்களை கேட்கும் தரம் ஒவ்வொருவருக்கும் மாறியிருக்கும். உங்கள் காதின் திறனை நீங்கள் இங்கே உள்ள ஒரு சாதனத்தால் அறிந்து கொள்ளலாம்.

பல்:

சாதாரணமாக மக்களுக்கு ஏற்படும் பல் வியாதிகளையும். அவைகளின் தற்காப்பு முறைகளையும் நீங்கள் இங்கே காணலாம் சொத்தைப் பல் வியாதி ஈகிரில் இரத்தம் வடிதல் போன்ற வியாதிகளை நீங்கள் காணவும். சொத்தைப் பல் ஏற்படும் விதங்களை நீங்கள் இங்கே அறியலாம். இந்த வியாதி வராமல் தடுக்க நவீன முறைகளை நீங்கள் இங்கே தெரிந்து கொள்ளவும் சொத்தைப்பல் ஆரம்பத்தில் வலி கொடுப்பதில்லை. ஆனால்வலி எடுத்த பிறகுடாக்டரிடம் சென்றால் அதை குணப்படுத்தவும் முடிவதில்லை. ஆகவே ஏதேனும் ஒரு கருப்புப் புள்ளி உங்கள் பல்லில் ஏற்பட்டால் உடனே நீங்கள் பல் டாக்டரிடம் செல்லவும்.

வாயை சுத்தமாக வைத்துக் கொள்ளவும். சுகாதார விதிகளை நீங்கள் இங்கே கேட்டு தெரியலாம். பல்லில் இரத்தம் வருதல் போன்ற வியாதிகளின் காரணங்களையும் அவைகளை தடுக்கும் முறையும் நீங்கள் இங்கே காணலாம்.

## *பிரிவு 14*

# விபத்துகளும், எலும்பு முறிவுக்குச் சிகிச்சைகளும்.

*இந்தப் பகுதியில் சாதாரணமாக மக்கட்கு ரயில்வண்டி, நெருப்பு, கார், பஸ்கள முதலியனவற்றால் ஏற்படும் விபத்துகளைத் தடுக்கும் முறைக ளைப் பற்றியும், அவ்வாறு ஏற்பட்ட விபத்துகளுக்கு உடனே செய்யவேண் டிய முதலுதவிகளைப்பற்றியும், மாதிரிகளைக் கொண்டும், படங்களைக் கொண்டும விரிவாக எடுத்துரைக்கப்படுகின்றன.*

*எலும்பு முறிவுப் பகுதியில் சாதாரணமாக உண்டாகும் எலும்பு முறி வுகளை எக்ஸ்ரே கதிர்களமூலம் எப்படி கண்டறிவது என்பதைப்பற்றியும் தெளிவுபெற விளககிக் கூறுகின்றனர். நவீன முறைப்படி எலும்பு முறிவு களை எவ்வாறு சிகிசசை செய்கின்றனர் என்பதையும் நீங்கள் கண்டறிய லாம. நாட்டுப்புறச் சிகிச்சையால ஏற்படும கெடுதல்கள் எல்லாம் எடுத் துக் காண்பிககப்படுகின்றன.*

*ஒடிந்து ஒன்றுடன் ஒன்று ஏறி நிற்கும் எலும்புத் துண்டுகளை இழுத்து சரி செய்ய உபயோகிக்கும் சில சாதனங்களையும் நீங்கள காண லாம. சிம்புகள் வைத்துக் கட்டி எலும்பு முறிவுகளை சிகிச்சை செய்யும் விதத்தையும அறிந்துகொள்ளுங்கள்.*

---

பிரிவு 15

# இருதயமும் இரத்த ஓட்டமும்

இருதயத்தைப் பற்றியும், இரத்த ஓட்டத்தைப் பத்றியும், தெரிந்துகொள்ள இப் பிரிவினை 5 பிரிவாக வைத்திருக்கிறது.

இருதயத்தின் அமைப்பு :—இருதயமும் அதிலிருந்து கிளம்பும் பெரிய ரத்தக் குழாயும் நெஞ்சில் எவ்வாறு அமைந்துள்ளது. இவைகளுக்கும் வயிற்றில் உள்ள பல உறுப்புகளுக்கும் உள்ள தொடர்புகளும் இங்கே காண்பிக்கப்படுகிறது.

2. இருதயம் ஒன்று நிஜமாகவே வைக்கப்பட்டிருக்கிறது. அதன் பாகங்களை நீங்கள் காணலாம்.

3. உடலின் மற்ற பல பாகங்களும் அவைகளின் இரத்த ஓட்டமும்,

4. பிறப்பிலே உண்டாகும் சில உறுப்பு மாறுபாடுகளை நீங்கள் காணலாம்' நெஞ்சின் முன் பாகத்தில் வெளியே இருதம் அமைந்துள்ளது ஒரு வியப்பானது

5, இருதயம். இரத்தக் குழாய்கள் முதலிய வற்றின் படங்கள்.

வேலை செய்யும் விதம் —இதிலே படங்களின் மூலம் இருதயம் வேலைசெய்யும் விதம். இரத்த ஓட்டம், இவைகளின் உருவங்களும் ,தவளையின் இருதயம் வேலை செய்யும் விதத்தையும் நீங்கள் நேரிலே காணலாம். இரத்த அமுக்கத்தை அளக்கும் விதம், மயிரிழை போன்ற இரத்தக் குழாய்களில் இரத்தம் பாயும் விதம் முதலிய வற்றை காணலாம்.

வியாதிகள் :— 1. இருதய வியாதிகளின் சராசரியும் பலதரப்பட்ட வியாதிகளின் கணக்குகளும். வியாதிகளின் குணங்களும் அவற்றை கண்டுபிடிக்கும் முறைகளும் இங்கே காணலாம்.

2. இருதயத்தை காக்கும் சில சாதாரண பழக்கவழக்கங்கள். ஆரோக்கிய மனிதனின் இருதயத்துக்கும், வியாதியால் பீடிக்கப்பட்ட இருதயத்துக்கும் உள்ள வேற்றுமைகளும், இருதய வியாதி உள்ளவர்கள் அனுசரிக்க வேண்டிய விதிகள் முதலியன.

வியாதிகளை கண்டுபிடிக்கும் விதங்கள் :—சாதாரண முறைகளைத் தவிர சில வியாதிகளை கண்டுபிடிக்க உதவும் கருவிகள்; எக்ஸ்ரே, மின்சாரத்தின் மூலம் இருதயத்தின் நிலைமையை அறிதல், இருதயத்தின் உட்பாகங்களை நேரிலே கண்டு அறியும் முறை, இருதயம் வரை சிறிய குழாயை செலுத்தி பல குறைகளை கண்டுபிடிக்கும் விதம் முதலியவற்றை காணலாம்.

சில இருதய வியாதிகளுக்கு நவீன ரண சிகிச்சை முறையின் மூலம் குணப் படுத்தும் விதம் நீங்கள் அறியவும். நீலம் பூத்து பிறக்கும் குழந்தைகள், மற்றும் பிறப்பிலே உண்டாகும் சில குறைகளை நிவர்த்தி செய்யும் வழி முதலியவற்றை நீங்கள் காணலாம்.

இருதய இரண சிகிச்சை முறை இன்னும் வளர்ச்சியடைய வேண்டும்.

*பிரிவு 16*

## மனிதனின் நரம்பு மண்டலம்

*மனிதனுடைய நரம்பு மண்டலம் ஒரு ஒப்புயர்வற்ற தனிச் சாதனமாகும். ஏனெனில் அன்றாட வாழ்க்கைக்கு இன்றியமையாத பல உறுப்புகளின் வேலையை மூளைதான கண்காணிக்கிறது.*

*உலகில் உள்ள பலவித உயிர்களில் மனிதன் சிறந்தவனுகவும் மற்ற உயிர்களுக்கும் மேலானவனுகவும் இருக்க நமது நரம்பு மண்டலத்தின் தனிச் சிறப்பு தான் காரணம். மனிதன் மூளை ஒரு விசித்திரமான இயந்திரம். ஒரு மனிதனது உணர்ச்சிகள், அவனது அன்றாட பணிகள், அறிவுத்திறன், பகுத்தறிவு போன்ற உயர்ந்த பண்புகளை மூளைதான் கவனிக்கிறது.*

*பல மிருகங்களின மூளைகளின் பாகங்களையும் நீங்கள் இங்கே காணலாம். மனிதனின மூளையை இந்த மிருகங்களின் மூளையோடு ஒப்பிட்டு பார்த்தால் மனிதனின் முன்னேற்றத்தை நீங்கள் அறியலாம்.*

*மின்சார மூளை என்ற ஒன்றை விஞ்ஞானிகள் கண்டுபிடித்து அவைகள் வேலை செயயுமவிதத்தை நீஙகள் காணலாம. ஆனுல் இந்த செயற்கை மூளையும் மனிதனின் இயறகை மூளையினுல் உண்டான ஒன்றுதானே.*

*நரம்பு மண்டலததிறகு ஏறபடும் சாதாரண வியாதிகளும் அவைகளைத் தடுககும் முறைகளும, வியாதிகள் வநதுவிட்டால் அவைகளைக் குணபபடுத்தும் வழிகளையும நீங்கள் இஙகே காணலாம். நவீன சாதனங்களைக் கொண்டு பலவிதமான வியாதிகளை கண்டு பிடிக்கவும், இரண வைத்தியங்கள் செய்து சரிபடுத்தவும் நமமால் முடிகிறது உங்களது அறிவின் திறனைக் கண்டுகொள்ள ஒரு சாதனம இங்கே இருக்கிறது.*

பிரிவு 17

## குடும்பத் திட்டம்

குடும்பத் திட்டம் ஏன்? சிறுகுடும்பமாயின் பெரு வாழ்வு.
தாய் நலனுக்காக
குழந்தை நலனுக்காக
குடும்ப நலனுக்காக
நாட்டின் நலனுக்காக
"பதினாறு பெற்று பரிதவிப்பதைவிட நான்கு பெற்று"
நலம் பெற வாழ
திட்டமிட்ட குடும்பத் தேவை-எப்படி?
கலவாமை, சந்த (ரிதம்) முறை
தற்காலிக அல்லது நிரந்தரக் கருத்தடை முறைகள் மூலம்.
இவைகளின் விளக்கங்களை நீங்கள் இங்கே கேட்டு அறியலாம்.

### மலடு

இந்தத் தம்பதிகளுக்கு குழந்தை பிறக்குமா? என்ற கேள்வி ஒரு சிக்கலானதுதான். ஆனால் மலடில் ஆண் மலடு பெண் மலடு என்று இரண்டு விதங்கள். பெண்களையே மலடு என்று சொல்லும் வழக்கம் நம நாட்டில் இருக்கிறது. ஆனால் அது ஒரு மூட நமபிக்கை. ஆணின் மலட்டுத் தன்மையால் கூட குழந்தை இல்லாது போகலாம்

மூன்று குழந்தை இல்லாத தம்பதிகளில் ஒரு குடும்பத்தாரையாவது தறகாலிக, மருத்துவ சதிகளைக் கொண்டு சரிசெயய முடியும. இதன் விளக்கங்களை நீங்கள் இங்கே படங்களில காணலாம்.

## பிரிவு 18

# இரண சிகிச்சை செய்யுமிடம்

மயக்க முறைகள் :—

1. மயக்கம் தருவதற்கு பழங்காலத்தில் அனுசரித்த முறைகளும் கருவிகளும், தற்காலத்தில் அனுசரிக்கும் நவீன முறைகளும் கருவிகளும் வைக்கப் பட்டுள்ளன.

"செயற்கை சுவாசம்" உண்டு பண்ணும் முறைகள் படங்கள் மூலம் உணர்த்தப் படுகின்றன. இத்துடன் நவீன கருவியான "செயற்கை சுவாசப் பைகள்" வைக்கப் பட்டு அது வேலை செய்யும் முறையும் காட்டப்படுகின்றது.

2. சென்னை கவர்ன்மெண்டு பெரிய ஆஸ்பத்திரியில் உள்ள "ஆபரேஷன் தியேட்டர்" மாதிரியும், அங்கு உபயோகப்படுத்தும் நவீன கருவிகளும் வைக்கப்பட்டு இரண சிகிச்சை செய்யும் விதமும் காட்டப் படுகின்றது.

3. சிறந்த வைத்தியர்களும் பிரபல விஞ்ஞானிகளும் மற்றும் பல அறிவாளிகளும் சேர்ந்து உழைப்பால் தற்கால இரண சிகிச்சை உயர்ந்த நிலையை அடைந்துள்ளது என்பதையும், இரண சிகிச்சை என்பது தனிப் பட்ட ஒருவரால் முடியாது என்பதையும், அதற்கு பல டாக்டர்கள் நர்ஸ்கள் முதலியோர் உதவி வேண்டும் என்பதையும் இப்பகுதி தெளிவுற எடுத்துக் காட்டுகின்றது.

## பிரிவு 19

### நீரும், உணவும்.

தண்ணீரில் எவ்வாறு வியாதிக் கிருமிகள் வருகின்றன, வளருகின்றன, பரவுகின்றன என்பதையும், அவைகள் நமக்கு செய்யும் கெடுதிகள், கெட்ட தண்ணீரை சுத்தம் செய்யும் விதங்கள் முதலியன காணலாம். நல்ல தேக ஆரோக்யத்திற்கு நல்ல தண்ணீர் அவசியம். சென்னையில் நல்ல தண்ணீர் திட்ட முறையும் மற்ற சில சாதாரண முறையும் இங்கே காணலாம்.

நல்ல உடல் வளர்ச்சி தரும் உணவைப் பற்றி நீங்கள் தெரிந்து கொள்ள கீழே காணலாம்.

உணவுகளின் தரம், அவைகளின் வேலை.

சம எடை உணவு, எதைப் புசிக்கவேண்டும் என்பது!

தென் இந்திய உணவில் உள்ள குறைபாடுகள்.

உணவுச் சத்துக் குறைவால் உண்டாகும் வியாதிகள்.

சமைப்பதால் உண்டாகும் கெடுதல்கள், அவைகளைத் தடுக்கும் முறைகளும்

## பிரிவு 20

## உஷ்ணமண்டல வியாதிகளும், தொத்துநோய்களும்.

நமது நாட்டில் சாதாரணமாக காணப்படுகிற சில வியாதிகளையும், அவைகளுக்குண்டான சிகிச்சை முறையையும், அவைகளைப் போக்குகின்ற முறைகளையும் மக்களுக்குத் தெளிவுறுத்தவே இந்தப் பகுதி எமது கண் காட்சியில் சேர்க்கப்பட்டிருக்கிறது,

இங்கே கீழ்க்கண்ட நோய்களைப்பற்றி தெரிந்துகொள்ளலாம்.

1. **மலேரியா:** மலேரியா என்பது என்ன? அந்நோயின் குறிகள் (அடையாளங்கள்) சிகிச்சை முறை, நோய் பரவும் விதம், தடுக்கும் முறை ஆகியவை இங்கே படங்கள், உருவங்கள் உதவியால் தெளிவாக விளக்கப் படுகின்றன.

2. **காலாஸார்:** இந்நோய் சென்னையின் சில பகுதிகளிலே வெகு சாதாரணமாகக் காணப்படுகிறது. இந்நோய் பரவாமல் தடுக்கும் முறைகளும், நமக்கு வராமலிருக்க நாம் எடுத்துக்கொள்ளவேண்டிய தற்காப்பு முறைகளும் இங்கே தெளிவாக்கப்படுகின்றன.

3. **யானைக்கால் வியாதி:** இது ஒருவகைக் கிருமிப் புழுவினால் ஏற் படுகின்ற வியாதி ஒருவகைக் கொசுவின் கடியினால் இந்நோய் உண்டாகி றது. இவ்வியாதியினால் கால் மிகப் பெரியனவாகலாம். ஆண்குறி மிகப் பெரியதாகலாம். அல்லது இடையிடையே மிக அதிகமான ஜுரம் உண் டாகலாம்.

4. **சீதபேதிகள்:** இதில் இரண்டு வகையுண்டு. ஒன்று கிருமிகளி னால் உண்டாவது. இன்னொன்று அமீபா என்ற ஒற்றையணு ஜந்துவினால் உண்டாவது. இவைகளால பெருங்குடலின உட்பாகம புண்ணாகின்றது. நோயாளி இரத்தமும் சீதமுமாக மலங் கழிக்கிறான். இந்நோய் உணவு, ஈக்கள், தண்ணீர் மூலமாய்ப் பரவுகின்றது. அமீபாவினால் ஏற்பட்ட சீத பேதியின் விளைவாகக் கல்லீரல் பெரிதாகலாம. அத்துடன் கல்லீரலில் கட்டியும் ஏறபடலாம். இந்த வியாதிகளைக் குணப்படுத்த சிறந்த மருந் துகள் உள்ளன.

5. **முறைக் காய்ச்சல் (டைபாய்டு ஜுரம்).** இது ஒரு நுண்கிருமி யினால் உண்டாகிறது. அக்கிருமி நமது உணவோடு நமது உடலுக்குள் செல்கிறது. ஈக்கள், தண்ணீர் மூலம் இவ்வியாதி பரவுகிறது. டைபாய்டு நோயாளிகளுக்கு தகுந்த சிசுருஷை சிகிச்சையின் ஓர் முக்கியமான பாக மாகும். அத்துடன நோயாளிக்கு வியாதிக்குண்டான மருந்துகள் கொடுக்கப்பட வேண்டும். நோயாளிகளுக்குச் செய்யும் சிசுருஷைகள் டைபாய்டு ஜுரத்தினால் புண்ணான குடல்கள். அந்நோயினால் ஏறபடக் கூடிய ஆபத்துகள் ஆகியவற்றைப்பற்றி இங்கே நீங்கள் அறிந்து கொள்ளலாம்.

6. **குடற் புழுக்கள் :** இவைகளில் பலவகைகள உண்டு. அவைகளில் உருணடையான புழுக்கள் தாம் சாதாரணமாக சிறுவர்களின் குடலிலே காணப்படுகின்றன. இம்மாதிரிப் புழுக்களை இப்பகுதியில் ஏராளமாகக் காணலாம். அநேகமாக எல்லாச் சிறுவரிடம் நூல் போன்ற ஒரு வகைப் புழு காணப்படுகிறது. ஆனால் இப்புழு இருப்பதனால் மிக பயப்பட வேண்டியதில்லை. சிகிச்சை முறையும் உடனே செய்ய வேண்டும் என்ற நியதி இல்லை. கொக்கிப் புழுவானது தனது கொக்கி போன்ற

வாயினுல் மனிதனின் குடலில் தொங்கிக் கொள்கிறது. அப்புழு இரத்தத்தை உறிஞ்சி விடுவதால் மனிதனுக்கு இரத்தமின்மை (சோகை) ஏற்படுகிறது, தட்டையான புழுக்களும் உண்டு. இவை நீளமாக இருக்கும். இம்மாதிரிப் புழுக்கள் குடலில் அநேகம் இருக்கலாம்.

இப்புழுக்கள் எல்லாம் உணவு, ஈக்கள், சரியாகச் சமைக்கப்படாத உணவுகள் சரியாக வேகவைக்காத இறைச்சி, உண்ணுதல் ஆகியவற்றால் நமது உடலுக்குள் செல்கின்றன. ஆகையால் சுத்தத்தின்மூலம் இப் புழுக்கள் நம்மை அடையாமல் காத்துக்கொள்ளலாம்.

7. **நரம்புச்சிலந்தி:** படிக்கட்டுகள் வைத்த கிணறுகளிலிருந்து நீர் சாப்பிடுவதால் இப் புழு நமது உடலுக்குள் செல்கிறது. ஆகையால் பழைய மாதிரிக் கிணறுகளை புதிய மாதிரியில் மாற்றியமைப்பதால் அதைத் தடுக்கலாம். இப் புழுவினுல், உடலின் கட்டிகள், பூட்டுகளில் தொந்தரவுகள், சில சமயத்தில் சாவு முதலியவை நேரலாம்.

8. **குஷ்டம் அல்லது குட்டநோய்:** இந்நோயின் மாதிரிகளும் அவைகளைப்பற்றிய சுவரொட்டிகளும், இப்பகுதியில் காணலாம். மேலும் நோய் பரவும் வகை. தடுக்கும் முறைகள், இவ்வியாதி உண்டாக்கும் கிருமியின் தோற்றம் முதலியவற்றை இங்கே கண்டுகொள்ளலாம்.

9. **பிளேக்:** இது எலிகளின் வியாதி. மனிதனுக்கும் வர முடியும். எலியின் மேலிருக்கும் தெள்ளுப்பூச்சி மனிதனைக் கடிப்பதால் இவ்வியாதி மனிதனுக்கு உண்டாகிறது. இவ்வியாதி வந்தால் உடம்பில் ஆங்காங்கே நெறிகட்டிக் கொள்ளும். இந்நெறிக் கட்டிகளிலே பிளேக் கிருமியைக் காணலாம். இவ்வியாதியினுல் இறந்த எலியின் வயிற்றைக் கிழித்து இந்த நெறிக் கட்டிகளைக் காட்டியிருக்கிறோம்.

10. **காலரா:** (வாந்திபேதி) இது நமது நாட்டிலே அதிகமாகக் காணப்படுகிற நோய். இனுகுலேஷன், வாந்திபேதி உள்ளவர்களை ஓர் தனி இடத்தில் வைத்தல். ஈக்களின் தொந்தரவை நீக்குதல், ஆகிய சுகாதார முறைகளால் இந்நோயை எளிதில் தடுத்துக் கொள்ளலாம்.

11. **அம்மை வியாதிகள்:** இவ்வியாதிகளில் உடம்பில் அம்மை உண்டாகிறது. இவ்வித அம்மைக் கொப்புளங்களை அவைகளின் உருவம், அமைப்பு இவற்றைக் காட்டும் மெழுகு மாடல்களைக் காணுங்கள். பெரியம்மையை இரண்டு வருடங்களுக் கொருமுறை அம்மை குத்திக் கொள்வதன் மூலம் தடுத்து விடலாம்.

12. **சொறி சிரங்கு:** இது ஒரு சரும வியாதி. சுகாதாரமின்மை, நோயுடையவருடன் நெருங்கிப் பழகுதல், அழுக்கு உடைகள் ஆகியவற்றால் இவ்வியாதி அதிகரிக்கின்றது.

இவ்வியாதி உண்டாகும் விதம், வியாதிக்குக் காரணமான பூச்சி ஆகியவை இங்கே காணலாம்.

## உடல் நல பரிசோதனைக் கூடம்

இதுவரை நீங்கள் உங்கள் உடம்பின் பல பாகங்களையும், அவைகள் வேலை செய்யும் விதத்தையும் அவைகள் வியாதியில் மாறுகின்ற விதத்தையும் கண்டீர்கள் அல்லவா. இனி நீங்கள் உங்கள் உடல் நிலையின் ஆரோக்கியத்தைப் பற்றி தெரிந்து கொள்ளலாம். அதற்கு இது ஒரு அரிய சந்தர்ப்பம். ஒரு ரூபாய் செலவில் டாக்டர்கள் உங்கள் உடலை பரிசோதனை செய்கிறார்கள். கீழ்கண்ட முறைப்படி அவைகள் நடத்தப்படுகின்றன.

பொதுப் பரிசோதனை, உயரம், மார்பின் அகலம், எடை முதலியன மூத்திரப் பரீட்சை, இரத்தத்தின் தன்மை, உங்கள் புப்புசத்தின் திறமை, இரத்த அழுக்கம், முதலியன இங்கே பரீட்சை செய்யப்படும். ரூபாய் 1.

சில பிரத்யேக பரீட்சைகள், அதாவது இரத்தத்தில் சர்க்கரையின் அளவு, பற்களின் நிலைமை, காதுகளின் கேட்கும் திறமை, கிரந்தி வியாதிக்கு இரத்த பரீட்சைகளும் இங்கே நடத்தப்படுகின்றன. இந்த அரிய சந்தர்ப்பத்தை நீங்கள் உபயோகப்படுத்தி நன்மையடையவும். இவைகளுக்கு ஒவ்வொரு பரிசோதனைக்கும் அணா எட்டு கட்டணம்.

---

## ACKNOWLEDGEMENT.

We thank all the Theatre owners who have displayed our slides free of charge in their Theatres.

We are thankful to the management and workers of Ms. Devi Press Ltd., who did a great job in getting our Souvenir in time.

We offer our sincere thanks to the firms for their kind donations in the form of Drugs, other materials etc.

We sincerely thank the various Govt. Department and other Organizations for Co-operating with us in making the Exhibition, a possibility.

Lastly our thanks are due to the Staff and Students of the Colleg who Co-operated with us inspite of odds.

*The Exhibition Committee.*



## CONTENTS




Printed by P. V. Parthasarathy, M A., B.L.,
at Devi Press Ltd., 83, Purasawalkam High Road, Madras-10